ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி—22

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்

## தேவநாகரி மூலமும் தமிழ் அனுவாதமும்



ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி

श्रीकामकोटिग्रन्थावलिः २२

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीमद् आद्यशङ्करभगवत्पूज्यपादैः विरचितम्

# ॥ श्रीदक्षिणामूर्त्यष्टकम् ॥

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य, श्रीजगद्गुरु
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप
श्रीचन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादानां श्रीमुखेन
समुल्लासितम्



श्रीकामकोटिर्विजयते

तृतीयं संस्करणम्

श्रीकामकोटि कोशस्थानेन प्रकाशितम्
४, प्रान्सिस् जोसफ् वीथी, चेन्नपुरी–1



[ मूल्यम् ४० पैसे

ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி—22

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்

வி. எச். சுப்ரமண்ய சாஸ்திரிகள் எழுதிய
தமிழ் அனுவாதத்துடனும், குறிப்புரையுடனும்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய
ஸ்வாமிகள் அருளிய திவ்விய ஸ்ரீ முகத்துடனும் கூடிய

இத்துடன் ஸ்ரீ ஆச்சார்யாள் அருளிய
தக்ஷிணாமூர்த்தியைப் பற்றிய உபந்யாஸமும்
சேர்க்கப்பட்டிருக்கிறது

மூன்றும் பதிப்பு

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை – 1.

 1965 [விலை 40 பைசே



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர சரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

॥ श्रीः ॥




श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकर
भगवत्पाद प्रतिष्ठित श्रीकाञ्ची कामकोटि-
पीठाधिप जगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्र-
सरस्वती श्रीपादैः क्रियते
नारायणस्मृतिः ॥

आत्मीयां विद्याभिवृद्धिमैश्वर्यादिकञ्च आकाङ्क्षमाणाया जनताया उपकाराय श्रीमद्भगवत्पादानुगृहीतं सरलमधुरपद-वाक्यार्थविराजमानं श्रीमद्गुरुमूर्तिकृपया श्रेयःप्रदं च श्रीदक्षिणा-मूर्त्यष्टकाख्यं ग्रन्थरत्नं भाषामयेन पदार्थविवरणेनानुवादेन च संयोज्य मुद्राप्य प्रकाशयितुमुत्सहन्ते, श्रीकामकोटि कोशस्थान-निर्वाहका इत्यवगत्य भृशं सन्तुष्यामः ॥

श्रद्धालव एतत्स्तोत्रपठन-तदर्थानुसन्धानादिना, लोकोप-कारबद्धादराः प्रकृतकोशस्थानाधिकारिणश्चैतत्सूक्तिरत्नमुद्रापण-प्रकाशनकैङ्कर्येण सर्वेश्वरं श्रीगुरुमूर्तिमाराधयन्तः समीहितसिद्धि-मधिगच्छन्त्वित्याशास्महे ॥

विजययात्रास्थानम्
कुत्तालं सर्वमान्याग्रहारः
श्रीशा० शके १८७०
सर्वधारि सं० मार्गशीर्ष शु० द्वितीया.

नारायणस्मृतिः

ஸ்ரீ:

முத்திரை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யவர்யர் களான ஸ்ரீமத் சங்கரபகவத்பாதர்களால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதீச்வரர் களான ஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதர்களால் நாராயணஸ்மரணம் செய்யப்படு கிறது.

ஆத்ம ஞானத்தின் வளர்ச்சியையும், ஐச்வரியம் முதலியவற்றையும் விரும்புகின்ற ஜனசமூகத்தின் உபகாரத்திற்காக ஸ்ரீமத் பகவத்பாதர்களால் அருளப் பட்டதும், எளிய இனிய சொல்லும் பொருளும் அமைந்து விளங்குகின்றதும், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் அருளின் வாயிலாக மோக்ஷத்தையளிக்கவல்லதுமான "ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்" என்னும் சிறந்த நூலைத் தமிழில் ப்ரதி பதார்த்தத்துடன் சேர்த்து ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின் பொறுப்பாளிகள் அச்சிட்டு வெளியிட விரும்புகின்றனர் என்பதை அறிந்து மிகவும் இன்புறுகிறோம்.

ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்ப தாலும், அதன் பொருளை அடிக்கடி நினைப்பதாலும், உலகத்திற்கு உபகாரம் செய்வதில் ஆவல் கொண்ட கோசஸ்தான நிர்வாகிகள் இந்தச் சிறந்த நூலை அச்சிட்டு வெளியிடுவது என்ற பணியாலும், ஸர்வேச் வரனை ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியைப் பூஜித்தவர்களாகி இஷ்ட ஸித்தியை அடைய வேண்டுமென்று ஆசீர் வதிக்கின்றோம்.

விஜய யாத்ராஸ்தானம்
குத்தாலம்
ஸர்வமான்ய அக்ரஹாரம்
ஸர்வதாரி வருஷம்
மார்கசீர்ஷ சுக்ல த்விதீயை

நாராயணஸ்ம்ருதி:

|| श्रीः ||

# || श्रीदक्षिणामूर्त्यष्टकम् ||

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்

विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।
यस्साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ १ ॥

*விஶ்வம் தர்ப்பண த்ருஶ்யமானநகரீ*
*துல்யம் நிஜாந்தர்கதம்*
*பச்யன்னாத்மனி மாயயா பஹிரிவோத்*
*பூதம் யதா நித்ரயா,*
*ய: ஸாக்ஷாத்குருதே ப்ரபோதஸமயே*
*ஸ்வாத்மானமேவாத்வயம்*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்*
*ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.*

**दर्पण-दृश्यमान-नगरी-तुल्यं** கண்ணாடியில் காணும் நகரம் போன்றதும், **आत्मनि - निजान्तर्गतं** தனக்குள்ளேயே இருப்பதுமான **विश्वं** இவ்வுலகை **यथा निद्रया** தூக்கத்திலுல் போல் **मायया** மாயையினுல் **बहिः** வெளியில் **उद्भूतमिव** உண்டானதைப் போல் **पश्यन्** பார்த்துக்கொண்டு; **यः** எந்த ஜீவன் **प्रबोधसमये** தூங்கி விழித்த ஸமயத்தில் (ஞானம் வந்த ஸமயத்தில்)

**अद्वय** இரண்டில்லாத **स्वात्मानमेव** (யாவற்றிற்கும் காரணமாகிய) தன் ஆத்மாவையே **साक्षात्कुरुते** நேரில் 'நான் தான் அந்த ஆத்மா' என்று உணருகிறானோ **तस्मै** அத்தகைய **श्री-गुरु-मूर्तये** (சச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய எனது ஞானோப தேஷ்டாவான குருவின் உருவமுடைய **श्री-दक्षिणा-मूर्तये** மாயா சக்தியால் சிருஷ்டிக்கும் திறமை கொண்டவரான, உண்மையில் உருவம் அற்றவருமான தெற்கு நோக்கிய மூர்த்தியோடு கூடியவருக்கு **इदं** இந்த **नमः** நமஸ்காரம்.

**கருத்து:**—எவ்விதம், தூங்குகிறவன் பற்பல கனவுகளை தனக்குள்ளே கண்டபோதிலும் வெளியில் நடப்பதாகக் கருதி, கஷ்டப்பட்டு, பிறகு விழித்துக்கொண்டவுடன் தான் மட்டும் இருப்பதை அறிந்து நிம்மதி அடைகிறானோ; அப்படியே இந்த ஜீவன் தனக்குள்ளேயே மாயையினால், கண்ணாடியில் ப்ரதிபலித்த நகரத்தைப் போல் தோன்றும் இந்த அகண்ட உலகை, தனக்கு வெளியில் இருப்பதாகக் கண்டு, கஷ்டமடைகிறான். பிறகு குருவின் ஞானோபதேசத்தால் ப்ரபஞ்சமில்லாத சுத்தமான எந்த ஆத்மாவை மட்டும் காண்கிறானோ, அந்த ஜீவ வடிவமாயும், உபதேசம் செய்த குருருபமாயும் இருக்கின்ற எல்லா சக்தியும் பொருந்திய தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

**குறிப்பு:**—இவ்வுலகம் முழுவதும் கனவு போன்றது. இக் கனவிலிருந்து விழித்துக் கொண்டால் நமது துக்கம் நீங்கும், உண்மை உலகம் விளங்கும். அனாதிகாலம் முதல் தூங்கி துன்புறுகிற ஜீவனை குரு தனது உபதேசங்களால் தட்டி எழுப்புகிறார். கனவு கண்ட ஜீவனும், எழுப்பிய குருவும், இரண்டிற்கும் பொதுவான கடவுளும் எல்லாம் ஒன்று என்ற எண்ணம் ஞானம் வந்தபொழுது உண்டா

கிறது. மாணுக்கன் இரவில் தூங்கும் பொழுது கனவில் தான் தூங்குவதாகவும் உபாத்தியாயர் வந்து அடித்து எழுப்புவதாகவும் கண்டு உண்மையாகவே விழித்துக் கொள்கிருன். அப்பொழுது கனவில் கண்ட உபாத்தியாயர், கண்ட மற்ற சம்பவம் எல்லாம் மறைந்து விடுகிறது. கனவு கண்டவன் விழித்தவுடன் வேற்றுமை இன்றி ஒருவனுகிவிடுவான். இதுதான் ஜீவனுடைய நிலையும், அத்வைத வேதாந்தத்தை ஒட்டி இக் கருத்தை இந்த ச்லோகம் விளக்குகிறது. (1)

बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुन-
र्मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम् ।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ २ ॥

பீஜஸ்யாந்தரிவாங்குரோ ஜகதிதம்
ப்ராங் நிர்விகல்பம் புன:
மாயாகல்பித தேசகாலகலனு
வைசித்ர்யசித்ரீக்ருதம்,
மாயாவீவ விஜ்ரும்பயத்யபி மஹா
யோகீவ ய: ஸ்வேச்சயா
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணமூர்த்தயே.

**बीजस्य** விதையின் **अन्तः** உள்ளே **अङ्कुर इव** முளையைப் போல் **प्राक्** சிருஷ்டிக்கு முன்பு **निर्विकल्पं** வேற்றுமையில்லாததும் **पुनः** சிருஷ்டிக்குப் பிறகு **माया-कल्पित-देशकालकलना-वैचित्र्य चित्रीकृतम्** ஈசனின் சக்தியாகிய மாயையினுல் கற்பித்த தேசம், காலம் அவை

களின் சேர்க்கை, ஆகிய வேற்றுமையினால் பற்பல் விதமாயிருக்கின்ற **इदं** இந்த **जगत्** உலகை எந்த ஈசன் **मायावी इव** இந்த்ர ஜாலம் செய்பவனைப் போல வும் **महायोगी इव** மஹா யோகியைப் போலவும் **स्वेच्छया** தன்னிஷ்டத்தினாலேயே **विजृम्भयति** சிருஷ்டிக் கிறாரோ **तस्मै श्री-गुरु-मूर्तये श्रीदक्षिणा मूर्तये इदं नमः**.

**கருத்து:**—உலகம் உருவாவதற்கு முன் விதைக்குள் முளையைப் போல உருப்புக்கள் தெளிவுபடாமல் மறைந் திருந்தன. பிறகு ஆத்மாவின் மாயாசக்தியால் தேசம் என்றும், காலம் என்றும், அவைகளின் சம்பந்தம் என்றும் எண்ணிறந்த உருவம் பெற்று உலகம் விளங்குகிறது. இவ்வுலகை, மாயாவி மாய வித்யை காட்டுவது போலவும், யோகி தன் யோக சக்தியால் பற்பல அற்புதங்களைப் படைப்பது போலவும் எவர் படைக்கிறாரோ அந்த தக்ஷிணா மூர்த்திககு இந்த நமஸ்காரம்.

**குறிப்பு:**—உலகம் சிருஷ்டிப்பதற்கு முன் இல்லை; அது இருந்தால் எவ்விதம் மறுபடியும் உண்டாகும்? எதுவும் இல்லாமல் இருப்பதால் தான் உண்டாகிறது என்பது தர்க்கசாஸ்திரிகளின் வாதம். அது சரியல்ல. இருப்பதே உண்டாகும். விதையில் முளை இருப்பதாலேயே முளைக்கிறது. இவ்விதம் உலகம் படைக்கு முன் அதன் காரணரூபத்தில் அவ்யக்தமாய், தெளிவுபடாமல் இருந்தது என்பது வேதாந்தி கள் கருத்து. அது இந்த ச்லோகத்தில் வெளியாகிறது. மேலும் மாயையால் உண்டான தோற்றம். கடவுள் ஓர் மாயாவி. அல்லது விச்வாமித்ரர் தவத்தின் மகிமையினால் உலகைப் படைக்கத் துவக்கியது போல் கடவுள் படைத்துள் ளார். ஆகவே உலகம் உண்மையல்ல என்ற கருத்தும் இதிலிருந்து வெளிப்படுகிறது. (2)

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थगं भासते
साक्षात्तत्त्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।
यत्साक्षात्करणात् भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ३ ॥

*யஸ்யைவ ஸ்புரணம் ஸதாத்மகமஸத்*
*கல்பார்த்தகம் பாஸதே*
*ஸாக்ஷாத் தத்வமஸீதி வேதவசஸா*
*யோ போதயத்யாச்ரிதான்,*
*யத்ஸாக்ஷாத்கரணாத் பவேந்ந புனரா*
*வ்ருத்திர்ப்பவாம்போநிதௌ*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்*
*ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.*

**यस्य** எந்த பரமாத்மாவினுடைய **सदात्मकं** ஸத்ரூபமான (எக்காலத்திலும் எத்தேசத்திலும் 'இருக்கிறது' என்ற அறிவிற்கு விஷயமான) **स्फुरणम् एव** ப்ரகாசமே **असत्कल्पार्थगं** இல்லாமலிருக்கும் பொருளுக்கு ஒப்பான (கனவில் காணும் பொருள்கள் போன்ற) ஆகாசம் முதலிய வஸ்துக்களை அடைந்து **भासते** விளங்குகிறதோ; **यः** குருவின் வடிவமாய் வந்த எவர் **आश्रितान्** ஸம்ஸார கஷ்டங்கள் தாங்க முடியாமல் தன்னையே சரணமடைந்தவர்களை **'तत्त्वमसि** நீ ப்ரபஞ்ச ஸம்பந்தமற்ற பரமாத்மாவாக இருக்கிறாய்' **इति** என்ற **वेदवचसा** வேத வாக்கியத்தினால் **साक्षात्** ப்ரத்யக்ஷமாகவே தத்வ ஸ்வரூபமான ஆத்மாவை **बोधयति** அறிவிக்கிறாரோ **यत्साक्षात्करणात्** சுத்த ஆத்ம ஸ்வரூபமாகிய எவரை ப்ரத்யக்ஷமாகப் பார்ப்பதால் **भवाम्भोनिधौ** ஸம்ஸாரமாகும் ஸாகரத்

தில் पुनरावृत्तिः மறுமுறை வருகை न भवेत् உண்டா காதோ तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणामूर्तये इदं नमः.

**கருத்து:**—உலகில் ஆத்மா ஒன்று தான், ஸத் அல்லது இருக்கும் பொருள். மற்றவை எல்லாம், அஸத் அல்லது பொய்யான பொருள். உண்மையான கயிற்றில் பொய்யான பாம்பு தோன்றுவது போல ஆத்மாவில் உலகம் தோன்றுகிறது. பொய்யான பாம்பு கயிற்றில் தோன்றும் பொழுது தோற்றம் கயிற்றினுடையது. பாம்பு என்பது பொய். அவ்விதமே ஆத்மாவில் உலகம் தோன்றும் பொழுது தோற்றம் ஆத்மாவினுடையது. ஆகவே ஆத்மாவின் தோற்றம் அல்லது சத்ரூபம் அஸத்தான பொய்யான உலகத்தினுடையது போல் தோன்றுகிறது. நாம் அதை உண்மை என்று கருதித் துன்புறுகிறோம். கருணாநிதியான தத்வமுணர்ந்த ஆசார்யன், நமக்கு வேதத்தைப் புகட்டி உலகத்தின் உண்மையை விளக்கி நேரில் அறியச் செய்கிறார். உலகத்தின் தத்துவமான ஆத்மாவே தக்ஷிணாமூர்த்தி. அவரை ஒரு முறை கண்டவருக்கு இந்த ஸம்ஸாரத்தில் மறு முறை பிறப்பில்லை. அந்த என் குருவாய் வந்த தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

**குறிப்பு:**—यस्यैव स्फुरणं ஒரு கிளிஞ்ஜலை வெள்ளி என்று ஏமாந்து பார்க்கிறோம். அப்பொழுது கிளிஞ்சலின் பளபளப்பு முதலியது வெள்ளியினுடையதாகத் தோன்றுகிறது. அப்படியே உலகம் பொய்யானதால் அதற்கு இருப்பு, தோற்றம் முதலியன ஆத்மாவினுடையது என்று உணர வேண்டும். न पुनरावृत्तिः உலகம் முழுவதும் நமது ஏமாற்றமானதால் அதன் உண்மை நிலையை ஒரு முறை அறிந்தால் மறுமுறை அந்த ப்ரமம், ஏமாற்றம் வராது. ஒரு முறை கிளிஞ்ஜல் என்று உண்மையை அறிந்து விட்டால் மறுமுறை

வேள்ளி என்ற ஏமாற்றம் அந்த கிளிஞ்ஜலில் வராதல்லவா? ஆகவே ப்ரமத்தால் ஏற்பட்ட சம்சார துக்கம் அறவே ஒழிந்து விடுகிறது என்று கருத்து. (3)

नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरं
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणाद्वारा बहिस्स्पन्दते ।
जानामीति तमेव भान्तमनुभात्येतत्समस्तं जगत्
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ४ ॥

நாநாசித்ர கடோதரஸ்தித மஹா
 தீப ப்ரபா பாஸ்வரம்
ஜ்ஞானம் யஸ்ய து சக்ஷுராதி கரண
 த்வாரா பஹிஃ ஸ்பந்ததே,
ஜாநாமீதி தமேவ பாந்த மனுபாத்-
 யேதத் ஸமஸ்தம் ஜகத்
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்
 ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.

नाना - च्छिद्र - घटोदर - स्थित - महादीप - प्रभा - भास्वरं பற்பல த்வாரங்களோடு கூடிய குடத்தின் உள்ளே இருக்கின்ற பெரிய விளக்கின் ஒளி போல் துலங்குகின்ற यस्य तु எந்த ஆத்மாவினுடைய ज्ञानं அறிவு चक्षुरादिकरणद्वारा கண் முதலிய புலன் வழியாக बहिः வெளியில் स्पन्दते செல்லுகிறதோ जानामि इति நான் அறிகிறேன் என்று भान्तं விளங்குகிற तम् एव அந்த ஆத்மாவையே एतत् இந்த समस्तं எல்லாமான जगत् உலகமும் अनुभाति பின்பற்றி விளங்குகிறதோ तस्मै श्रीगुरुमूर्तये इदं नमः.

கருத்து:—பெரிய விளக்கு போன்ற ஆத்மா குடம் போன்ற இச் சரீரத்துக்குள் அடைபட்டுக் கிடக்கிறது. குடத்

தில் பல த்வாரங்கள் இருப்பின் அதன் வழியாக தீபத்தின் ஒளி வீசுவது போல் சரீரத்திற்குள்ளிருக்கும் ஆத்மாவின் ஒளி புலன்களின் வழியாக வெளிப்படுகிறது. மேலும் பொருள்களை அறியும் இந்த ஆத்மாவின் ஒளியையே உலக மனைத்தும் ஏற்று விளங்குகிறது. ஆத்மாவின் ப்ரகாசம் ப்ரகாசிக்கும் பொருள்களிலும் ப்ரதிபலிக்கிறது. ஆத்மா வின் ப்ரகாசம் இல்லாவிடில் அவைகளுக்குச் சொந்த ப்ரகாசம் இல்லை. அத்தகைய ஆத்மாவின் வடிவமான தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

குறிப்பு:—விளக்கைப் பார்ப்பதற்கு மற்றோர் விளக்கு வேண்டியதில்லை. அதுபோல் ஆத்மாவை விளக்க மற் றொன்று வேண்டாம். அதுவே எல்லாவற்றையும் விளக்கி தன்னையும் விளக்கிக் கொள்கிறது. அந்த ஆத்மா கண் ணாடி போன்ற அந்த கோணத்தில் ப்ரதி பிம்பிக்கிறது. அப்பொழுது அந்த கோணத்திலிருந்து ஒளி வீசுகிறது. ஆகிலும் அவ்வொளி குடத்தில் வைத்த விளக்கு போல் வெளியில் முழுவதும் வீசுவதில்லை. கண், மூக்கு போன்ற த்வாரங்கள் வழியாக மட்டும் கொஞ்சம் கொஞ்சமாக வெளிச் சென்று மற்ற பொருள்களோடு கலக்கிறது. அப்பொழுது அப்பொருள் நமக்கு தெரிந்ததாகிறது. மேலும் உலகில் சூரியன் சந்திரன் முதலியவைகளுக்குக்கூட சொந்த ஒளி இல்லை. ஆத்மாவின் ஒளி தான் அங்கு ப்ரதிபலிக்கிறது என்பதெல்லாம் வேதாந்த சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது. அக் கருத்துக்களை இந்த ச்லோகத்தில் காணலாம்.

देहं प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालान्धजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः ।

मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ५ ॥

*தேஹம் ப்ராணமபீந்த்ரியாண்யபி சலாம்*
*புத்திம் ச சூன்யம் விதுঃ*
*ஸ்த்ரீபாலாந்த ஜடோபமாஸ் த்வஹமிதி*
*ப்ராந்தா ப்ருஶம் வாதினঃ,*
*மாயா ஶக்தி விலாஸ கல்பித மஹா*
*வ்யாமோஹ ஸம்ஹாரிணே*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்*
*ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.*

**देहं** சரீரத்தையும் **प्राणम् अपि** ப்ராணனையும் **इन्द्रियाणि अपि** இந்திரியங்களையும் **चलां** (ஒரு கணத்திற்கோர் முறை) மாறுகின்ற **बुद्धिं च** புத்தியையும் **शून्यं** ஒன்றுமில்லாத சூன்ய நிலையையும் **अहम् इति** தான் என்று (ஆத்மாவென்று) **वादिनः** சார்வாகன் முதலிய வாதிகள் **स्त्री-बाल-अन्ध-जडोपमाः** பெண்கள், குழந்தைகள், குருடர்கள், அறிவற்றவர்கள் இவர்களுக்கு ஒப்பாக **भ्रान्ताः** ஏமாந்தவர்களாக **भृशं** மிகவும் **विदुः** அறிந்தார்கள். **मायाशक्ति - विलास - कल्पित - महा - व्यामोह - संहारिणे** மாயா சக்தியின் விலாஸங்களால் உண்டாக்கப்பட்ட பெரும் ஏமாற்றத்தை அகற்றும் **तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणामूर्तये इदं नमः.**

*கருத்து:—இந்த ஸ்தூல சரீரம் முதல் ப்ராணங்கள், இந்திரியங்கள், க்ஷணிகமான புத்தி, சூன்யம் ஒவ்வொன்றையும் ஆத்மாவாகக் கருதி ஏமாந்து பிறரையும் ஏமாற்றும் வாதிகள் பல பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அஜ்ஞானத்தினால் அவ்விதம் கருதுகிறார்கள். அவர்களை விட்டு*

மாயை நீங்கவில்லை. அதனாலேயே அவர்கள் அவ்விதம் கூறுகிறார்கள். அந்த மாயையால் உண்டான ஏமாற்றம் பகவானுடைய அருளாலேயே நீங்கும். அந்தக் கடவுளாயிருக்கும் தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

குறிப்பு :—மாயையினால் அறிவு மறைபட்டிருப்பதால் ஒவ்வொருவரும் தன்னுடைய உண்மை ஆத்மாவை அறிவதில்லை. ஆகவே தம் தமக்கு தோன்றியவாறு ஆத்மாவைப்பற்றி கூறுகிறார்கள். அந்த மாயை கடவுள் திருவருளால் மறைந்தால் பிறகு ஆத்மாவின் உண்மை உருவம் விளங்கும் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. (5)

राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छादनात्
सन्मात्रः करणोपसंहरणतो योऽभूत्सुषुप्तः पुमान् ।
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ६ ॥

*ராஹுக்ரஸ்த திவாகரேந்து ஸத்ருசோ*
*மாயாஸமாச்சாதனாத்*
*ஸன்மாத்ர: கரணோப ஸம்ஹரணதோ*
*யோபூத் ஸுஷுப்த: புமான்,*
*ப்ராகஸ்வாப்ஸமிதி ப்ரபோதஸமயே*
*ய : ப்ரத்யபிஜ்ஞாயதே*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்*
*ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.*

**यः पुमान्** எந்த ஆத்மா **माया – समाच्छादनात्** மாயையினால் மூடப்பட்டிருப்பதால் **राहु - ग्रस्त - दिवाकरेन्दु - सदृशः** ராகு மறைத்த சூர்ய சந்திரர்களுக்கு ஒப்பாக **सन्मात्रः** ஸத் (இருத்தல்) ரூபமாக மட்டும் இருந்து

கொண்டு करणोपसंहरणतः இந்த்ரியங்களை அடக்கி இருப்பதால் सुषुप्तः நன்றாகத் தூங்கியவனாக अभूत् இருந்தானோ எந்த ஆத்மா प्रबोधसमये விழித்துக் கொண்ட சமயத்தில் प्राक् முன்பு अस्वाप्सं தூங்கினேன் इति என்று प्रत्यभिज्ञायते நினைக்கப்படுகிறானோ तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणा - मूर्तये इदं नमः.

**கருத்து :**—ஆத்மா உறங்கும் பொழுது ஐம்புலன்களையும் மனதையும் அடக்கி ஒருவித செய்கையும் இல்லாமல் இருக்கிறது. அப்பொழுது மாயை மூடிக் கொண்டிருப்பதால் ஆகவே க்ரகண வேளையில் சூரியனும் சந்திரனும் இருப்பது போல், ஆத்மா இருக்கிறது. ஆனால் உறங்கும் பொழுது ஆத்மா இல்லை என்று கூறமுடியாது. ஏன் என்றால், விழித்துக் கொண்டவுடன் தான் உறங்கினேன் என்று உறங்கினவனுக்கு அறிவு உண்டாகிறதல்லவா? அத்தகைய ஆத்மரூபமான தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

**குறிப்பு :**—சாந்த்தோக்ய உபநிஷத்தில், ஜீவாத்மா உறங்கும் பொழுது ஸத்ரூபமான ஆத்மாவோடு ஒன்று சேர்ந்து விடுகிறது என்று கூறியிருக்கிறது. அதையொட்டியே இங்கு ஸன்மாத்ர: என்று ச்லோகத்தில் சொல்லியிருக்கிறது. सत् என்ற சொல்லிற்கு மாயை வந்து மூடி, ஒரு விதமான செய்கையும் இல்லாமல் 'இருக்கிறது' என்று மட்டும் சொல்லக்கூடிய நிலையில் இருக்கும் ஆத்மா என்ற பொருள். (6)

बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तः स्फुरन्तं सदा ।
स्वात्मानं प्रकटीकरोति भजतां यो मुद्रया भद्रया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ७ ॥

*பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷு ததா*
*ஸர்வாஸ்வவஸ்தாஸ்வபி*
*வ்யாவ்ருத்தாஸ்வனுவர்தமானமஹ–*
*மித்யந்த: ஸ்ப்புரந்தம் ஸதா,*
*ஸ்வாத்மானம் ப்ரகடீகரோதி பஜதாம்*
*யோ முத்ரயா பத்ரயா*
*தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்*
*ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.*

**बाल्यादिषु** குழந்தைப் பருவம் முதலானதும் **तथा** அப்படியே **जाग्रदादिषु अपि** ஜாக்ரத் (விழிப்பு) முதலானதுமான **व्यावृत्तासु** வேறுபட்ட **सर्वासु अवस्थासु अपि** எல்லா அவஸ்தைகளிலும் **अनुवर्तमानं** வேறுபடாமல் தொடர்ச்சியாய் வந்துகொண்டிருப்பதும் **सदा** எப்பொழுதும் **अहम् इति** நான் என்று **अन्तः** உள்ளே **स्फुरन्तं** விளங்குவதுமான **स्वात्मानं** தன்னைக் காட்டிலும் வேற்றுமை இல்லாத பரமாத்மாவை **भजतां** தன்னை ஸேவிப்பவர்களுக்கு **यः** எந்த தக்ஷிணாமூர்த்தி **भद्रया** மங்களமான **मुद्रया** சின் முத்திரையினால் **प्रकटीकरोति** ப்ரத்யக்ஷமாக காண்பிக்கிறாரோ **तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणामूर्तये इदं नमः**.

**கருத்து.—ப்ராணிகளுக்கு முறையே பால்யம், யௌவனம், வார்த்தகம் என்றும். ஜாக்ரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்றும் இருவகை நிலைகள் ஏற்படுகின்றன. ஆனால் இந்த எல்லா அவஸ்தைகளிலும் ஒருவன் தொடர்ந்து மாறுமல் இருந்து கொண்டே இருக்கிறுன். ஆகவே அவன் அவஸ்தைக்கு உட்படாதவன் என்று வெளியாகிறது. உதாரணமாக, ஒருவன் யௌவனத்தில் இருக்கும்பொழுது தன்னுடைய பால்யமான அவஸ்தையையும் அதில் தான்**

செய்த செயல்களையும் நினைத்துப் பிறருக்குச் சொல்லு கிறான். அவனுடைய பால்ய அவஸ்தை இப்பொழுது இல்லை. ஆதலால் கூறுகிறவன் பால்யாவஸ்தையோடு ஒன்றுபட்டு வேற்றுமை இல்லாமல் இருந்திருப்பானாகில் இப்பொழுது இவ்விதம் கூறமுடியாது. ஆகவே முன்பு பால்யத்தைஅனுபவித்தவனும் இப்பொழுது யௌவனத்தை அனுபவித்தவனும் அந்த அவஸ்தைகளைக் காட்டிலும் வேறு என்று உணரவேண்டும். அவ்விதமே கனவு கண்டவன் விழித்துக் கொண்டு நான் கனவு கண்டேன் என்று கூறு கிறான். ஆகவே கனவு கண்டவனும் விழித்துக் கொண்ட வனும் வேறில்லை என்பது வெளியாகவில்லையா? ஆனால் அவஸ்தைகள் மட்டும் வேறுதான். கனவு காணும் நிலையும் விழித்துக் கொண்ட நிலையும் ஒன்று தான் என்று யார்தான் நினைப்பார்கள்? ஆகவே அவஸ்தைகளோடு கூடிய ப்ராணி கள் புஷ்பமாலைபோல் இருக்கிறார்கள். அதில் அவஸ்தை கள் புஷ்பங்களுக்கு ஒப்பானவைகள். ஆத்மா புஷ்பம் தொடுத்திருக்கும் நாருக்கு ஒப்பானது. நார் முதலிலிருந்து கடைசி வரையில் தொடர்ச்சியாய் வரும் பொழுது புஷ்பங் களை மட்டும் சிவப்பும் வெளுப்புமாய் மாறி வருகின்றன. இவ்விதமே ஆத்மாவும் அவஸ்தைகளும், இவ்விதம் வெவ் வேறு அவஸ்தைகள் வந்துகொண்டே இருக்கும் பொழுது நான் என்ற எண்ணம் மட்டும் மாறாமல் தொடர்ச்சியாய் நம்முள்ளத்தில் தோன்றிக் கொண்டே இருக்கிறது. தன்னை அடைக்கலம் புகுந்தோருக்கு அந்த ஜீவாத்மா பரமாத்மா வாக எந்த தக்ஷிணாமூர்த்தி சின்முத்திரையினால் விளக்கிக் காண்பிக்கிறாரோ அவருக்கு நமஸ்காரம்.

குறிப்பு :—தக்ஷிணாமூர்த்தியின் உருவத்தில் வலது கை கட்டை விரலும் ஆள் காட்டி விரலும் சேர்க்கப்பட்டு துலங்கு

வதைப் படங்களிலும் ப்ரதிமைகளிலும் காணலாம். அதற்கு சித் அல்லது ஞான முத்திரை என்று பெயர். அதற்கு ஜீவ பிரம்மஐக்யம் என்பது பொருள். அதனாலேயே தன்னை அடைக்கலம் புகுந்தோருக்கு சித் முத்திரையால் அவர் ஆத்ம தத்வத்தை உபதேசிப்பதாக இந்த ச்லோகம் கூறுகிறது. (7)

विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसंबन्धतः
शिष्याचार्यतया तथैव पितृपुत्राद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ८ ॥

விச்வம் பஶ்யதி கார்யகாரணதயா
ஸ்வஸ்வாமி ஸம்பந்ததஃ
ஶிஷ்யாசார்யதயா ததைவ பித்ரு
புத்ராத்யாத்மனா பேததஃ,
ஸ்வப்னே ஜாக்ரதி வா ய ஏஷ புருஷோ
மாயா பரிப்ராமிதஃ
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணமூர்த்தயே.

स्वप्ने जाग्रति वा தூக்கத்திலோ, விழிப்பிலோ यः एषः எந்த ஒரு पुरुषः (ஸமமாய்) எல்லாவற்றிற்கும் உள்ளிருந்துவரும் ஆத்மா माया - परिभ्रामितः மாயையினால் பற்பல ப்ரமத்தை அடைவிக்கப்பட்டவராக विश्वं இந்த உலகை कार्यकारणतया கார்ய காரணத் தன்மையோடும் स्व - स्वामिसम्बन्धतः தான் தன் எஜமான் என்ற சம்பந்தத்தோடும் शिष्याचार्यतया சிஷ்யன் ஆசார்யன் என்ற தன்மையோடும் तथा

एव அப்படியே पितृपुत्राद्यात्मना தகப்பன் மகன் என்றும் भेदतः பற்பல வேற்றுமையை உடையதாக पश्यति பார்க்கிறரோ तस्मै श्रीगुरुमूर्त्तये श्रीदक्षिणामूर्तये इदं नमः.

கருத்து :—எந்த பரமாத்மா, உறக்கத்திலோ, விழிப்பிலோ எப்பவும் உள்ளிருந்து கொண்டு, தனது மாயையின் உட்புகுந்து கொண்டு ஜீவரூபம் பெற்று மாயா சக்தியினுல் பலவிதமான ப்ரமத்தையும் அடைந்து இவ்வுலகை கார்ய காரண வடிவமாகவும், அடிமை எஜமானன் என்ற வேற்றுமையோடு கூடியதாகவும், சிஷ்யன் ஆசார்யன் என்ற தன்மையோடு சேர்ந்ததாகவும், தகப்பன் மகன் என்றிவ்வித வேறுபாட்டோடும் பார்க்கிறரோ அந்த ஆத்ம ரூபமாகிய தக்ஷிணாமூர்த்தியை நமஸ்காரம் செய்கிறேன்.

குறிப்பு :—உலகம் பொய். ஆத்மா மாயையில் உட்பட்டுப் பலவிதமாக கற்பித்தது இவ்வுலகம். அந்த மாயை கடவுளின் சக்தி. ஆகவே கடவுள் மாயைக்குள் புகுந்து ஜீவ வடிவம் கொண்டு உலகை உண்டாக்குவதாக வேதாந்தம் கூறுகிறது. இக்கருத்து இங்கு விளங்குகிறது. (8)

भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्
इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किंचन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभोः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ९ ॥

பூரம்பாம்ஸ்யநலோநிலோம்பர-
மஹர்நாதோ ஹிமாம்சு: புமான்
இத்யாபாதி சராசராத்மகமிதம்
யஸ்யைவ மூர்த்யஷ்டகம்,

நான்யத் கிஞ்சன வித்யதே விம்ருஶதாம்
யஸ்மாத் பரஸ்மாத் விபோ:
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.

**यस्य एव** எந்த பரமேச்வரனுக்கே **भूः** பூமி **अम्भांसि** ஜலம் **अनलः** அக்னி **अनिलः** காற்று **अम्बरं** ஆகாசம் **अहर्नाथः** சூர்யன் **हिमांशुः** சந்திரன் **पुमान्** ஜீவன் **इति** இவ்விதம் **इदं** இந்த **चराचरात्मकं** அசைகின்றதும் அசையாததுமான **मूर्त्यष्टकम्** எட்டு உருவம் **आभाति** ப்ரகாசிக்கின்றதோ **विमृशतां** உலகத்தின் உண்மையை சோதிக்கின்றவர்களுக்கு **विभोः** எங்கும் நிறைந்த **यस्मात् परस्मात्** எந்த பரமாத்மாவைக் காட்டிலும் **अन्यत् किञ्चन** வேறு ஒன்றும் **न विद्यते** இல்லையோ **तस्मै** அந்த எல்லாமான **श्रीगुरुमूर्तये श्रीदक्षिणा - मूर्तये इदं नमः**.

கருத்து :—இந்த உலகம் பூமி, ஜலம், அக்னி, காற்று ஆகாசம், சூரியன், சந்திரன் ஜீவாத்மா என்று எட்டு பாகமாக நமக்கு தோற்றுகிறது. இவ்வெட்டும் பகவானுடைய உருவங்கள். அவைகளின் உண்மையைச் சோதித்துப் பார்ப்பவனுக்கு இவ்வெட்டிலும் பகவானுடைய உருவத்தைத் தவிர்த்து மற்றொன்று இராது. இவ்விதம் எட்டு உருவத்தோடு உலகை அளாவி நிற்கும் தக்ஷிணாமூர்த்தியை வணங்குகிறேன்.

குறிப்பு :—பகவானை உபாஸிப்பவன் தன் சரீரத்தில் இருக்கும் ஐந்து பூதங்களை வெளியில் இருக்கும் பஞ்ச பூதங்களோடும், சூர்ய சந்திரன்களோடு தன்னை அஷ்ட மூர்த்தியான பரமசிவனோடும் ஒன்று சேர்த்து த்யானம் செய்ய வேண்டும் என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். அவ்

விதம் கூறியிருக்கிறார்கள். அவ்விதம் த்யானம் செய்பவனுக்கு உலகில் பரமசிவ மூர்த்தியைத் தவிர மற்றொன்று தோன்றாது என்ற கருத்தும் இந்த ச்லோகத்தில் அடங்கி உள்ளது. (9)

सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिंस्तवे
तेनास्य श्रवणात् तदर्थमननात् ध्यानाच्च संकीर्तनात् ।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिद्ध्येत् तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम् ॥ १० ॥

*ஸர்வாத்மத்வமிதி ஸ்புடீக்ருதமிதம்*
*யஸ்மாதமுஷ்மிம்ஸ்தவே*
*தேனாஸ்ய ஶ்ரவணாத் ததர்த்த மனனாத்*
*த்யானாச்ச ஸங்கீர்த்தனாத்,*
*ஸர்வாத்மத்வ மஹா விபூதி ஸஹிதம்*
*ஸ்யாதீஶ்வரத்வம் ஸ்வத:*
*ஸித்த்யேத் தத் புனரஷ்டதா பரிணதம்*
*சைஶ்வர்ய மவ்யாஹதம்.*

इति இந்த ப்ரகாரம் यस्मात् எக்காரணத்தால் अमुष्मिन् இந்த स्तवे ஸ்தோத்ரத்தில் इदं இந்த (உபனிஷத்துக்களால் கூறப்பெற்ற) सर्वात्मत्वं எல்லாம் ஒரே ஆத்ம ரூபம் என்ற தத்வம் स्फुटीकृतं விளக்கப் பெற்றிருக்கிறதோ तेन ஆகையால் अस्य இந்த ஸ்தோத்ரத்தை श्रवणात् கேட்பதாலும் तदर्थ - मननात् இதன் அர்த்தத்தை மனதால் சிந்திப்பதாலும் ध्यानात् த்யானம் செய்வதாலும் संकीर्तनात् च பிறருக்கு நன்றாகச் சொல்வதாலும் सर्वात्मत्व -

महाविभूति - सहितं எல்லாம் ஒரே ஆத்மாவாக இருக்கும் நிலையாகி பெரிய ஐச்வர்யத்தோடுகூடிய ईश्वरत्वं பரமாத்மத் தன்மை स्यात् ஏற்படும். पुनः மேலும் अष्टधा எட்டாக परिणतं வகுக்கப்பட்ட ऐश्वर्यं च அணிமாதி ஐச்வர்யமும் अव्याहतं தடையின்றி स्वतः தானகவே सिद्ध्येत् கைகூடும்.

கருத்து :—இந்த தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரத்தில் ஜீவ ப்ரஹ்ம ஐக்கியம் என்ற மோக்ஷத்திற்கு சாதனமாகிய பெரிய தத்வம் விளக்கப் பெற்றிருப்பதால் இதை ஒரு குரு முகமாய்க் கேட்டு மனனம் செய்து த்யானித்து அறிந்து பிறருக்கு உபதேசிப்பவன் எல்லா சித்திகளுக்கும் மேலான தான் ப்ரம்மம் என்ற நிலையை அடைகிருன். அஜ்ஞானி களுக்கு உயர்ந்ததாகத் தோன்றும் அணிமாதி எட்டு சித்தி களும் அவனுக்குத் தடங்கலின்றி வசமாகிவிடும்.

குறிப்பு :—ஜீவனும் ப்ரம்மமும் ஒன்று என்ற தத்வமே உயர்ந்தது. இதை அறிந்தவனுக்கு வசமாகாது ஒன்று மில்லை. ஆகவே ஜீவனும் ப்ரம்மமும் ஒன்று என்பதை விளக்கும் இந்த ஸ்தோத்திரத்தை அறிந்தவனுக்கு தானக அணிமாதி சித்தி ஏற்படுகிறது என்று இதில் கூறி இருக் கிறது. (10)

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி

**ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதி அவர்கள் 21-11-32-ல் செய்த உபன்யாஸம்.**

இன்றைக்குத் தொள்ளாயிரம் வருஷங்களுக்கு முன்பு உத்தரதேசத்தில் கிருஷ்ணமிச்ரரென்று ஒரு பெரியவர் இருந்தார். கிருஷ்ணாஷ்டபதீ செய்த ஜயதேவரும் அவரும் ஸமகாலத்தவர்களென்று சொல்லுகிறார்கள். அந்த கிருஷ்ண மிச்ரர் ப்ரபோதசந்த்ரோதயம் என்று ஒரு கிரந்தம் எழுதியிருக்கிறார். பிரபோதம் - ஞானம். ஞானமாகிற சந்திரனுடைய உதயம் என்பது அதன் அர்த்தம். விவேகன் என்பவன் ஒர் அரசன். அவனுடைய எதிரி மஹா மோஹன் என்பவன். விவேகனுக்கு நல்ல குணங்களெல்லாம் மந்திரிகளாகவும் ஸைந்யங்களாகவும் இருக்கின்றன. கெட்ட குணங்களெல்லாம் மஹாமோஹனுடைய பரிவாரங்கள். விவேகனுக்குச் சாந்தி என்ற மனைவி மூலமாக பிரபோதன் என்று ஒரு புத்திரன் உண்டாகிறான். இந்தமாதிரி விஷயங்களை வைத்து ஒரு நாடகமாக அதை எழுதியிருக்கிறார். யுத்தம், தூது, மோசம் முதலியவை அந்த நாடகத்தில் வருகின்றன. பிரபோதனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணுவதோடு பூர்த்தியாகிறது.

அந்த கிரந்தத்தை வடகலை வைஷ்ணவ ஆசாரியராகிய வேதாந்ததேசிகர்என்பவர் கண்டனம்பண்ணி ஸங்கல்ப ஸூர்யோதயம் என்று ஒரு நாடகம் எழுதியிருக்கிறார். பிரபோதசந்த்ரோதயத்திலுள்ள

கொள்கைகள் தப்பு என்பது அவருடைய அபிப்ராயம். ஸூர்யோதயத்துக்கு அப்புறம் சந்த்ரோதயம் இல்லையல்லவா? அதற்காகத் தாம் செய்த கண்டனக் கிரந்தத்துக்கு ஸூர்யோதயம் என்று பெயர் வைத்தார். அந்த தேசிகர் மஹாவித்வான். எதிலும் நிரம்ப யோக்கியதை உடையவர். அதனால்தான் ஊரூராக அவருக்கு ஒரு ஸந்நிதி ஏற்படுத்திக் கொண்டாடி வருகிறார்கள். அவருக்கு நிகமாந்த மஹாதேசிகன் என்று பெயர், மத்வாசாரியர் உபயக்ராஸராஹூதயம் என்று ஒரு கண்டனக் கிரந்தம் எழுதினர். ராஹூதயமானல் சந்திரன் ஸூரியன் இரண்டும் போய்விடும் என்பது அவருடைய அபிப்பிராயம். ராஹு சாயாக்கிரஹம்: நிழல். கேதுவும் அப்படியே. நவக்கிரஹங்களில் இந்த இரண்டும் போனல் பிரதானமாக இருப்பவை ஏழு கிரஹங்கள் தாம். இந்த இரண்டுக்கும் தனியான கணனம் வேண்டாம். ஸூர்ய சந்திரர்களுக்கு எதிரான கதிதான் இந்த இரண்டினுடைய கதியாகும். சாயை என்பதற்கு இருட்டு என்று அர்த்தம்.

तमस्तु राहुः स्वर्भानुः सैंहिकेयो विधुंतुदः ।

தமஸ்து ராஹு: ஸ்வர்பாநு:
ஸைம்ஹிகேயோ விதுந்துத: | —அமரகோசம்.

என்று அமரம் சொல்லுகிறது.

இருட்டு உண்டானல் பிரகாசத்தை மறைக்கிறது. அந்த அபிப்பிராயத்தை வைத்துக்கொண்டு மத்வாசாரியர் உபயக்ராஸராஹூதயம் என்று பெயர் வைத்தார்.

முதலில் ஏற்பட்ட க்ரந்தம், சாந்தியும் விவேகமும் உண்டானால் பிரபோதம் உண்டாகிறது என்ற கருத்தைச் சொல்லுவதற்காக ஏற்பட்டது. அதைக் கண்டிக்கவேண்டுமென்று தேசிகருக்குத் தோன்றி அவர் கண்டனம் எழுதினார். பின்பு அதற்குக் கண்டனம் வந்தது. முதல் க்ரந்தத்துக்கே ஸூர்யோதயம் என்ற பெயர் வைத்திருந்தால் அடுத்தபடி வந்த கண்டனம் ராஹூதயமாக இருக்கும். ஆனால் அவர் இப்படி வரும் என்று நினைத்து எழுதவில்லை. சந்த்ரோதயமென்று ஏன் பெயர் வைத்தார்?

உஷ்ணமும் ஒளியும் சேர்ந்தேயிருக்கும். தாபத்தில் நமக்குப் பிரியமில்லை. பிரகாசத்தில்மட்டும் பிரியம் இருக்கிறது. அந்தப் பிரகாசத்தைக் குளிர்ச்சியாகத் தரவேண்டும். சந்திரன் அப்படிச் செய்கிறான். ஞானம் அப்படிப் பட்டது. மற்ற வித்தைகளில் சிரமம், தாபம், அஹங்காரம் முதலியவை ஏற்படுகின்றன. ஆத்ம ஜ்ஞானத்தைத் தவிரப் பாக்கி எல்லாம் தாபத்தைத் தரும். மனதுக்கு ஆனந்தத்தைத் தருவது பிரபோதம் ஒன்றுதான். அதற்குச் சந்திரனை திருஷ்டாந்தமாக அவர் சொன்னார். அந்தப் பெயர் அடி பட்டுப் போகவேண்டும் என்ற நோக்கத்தோடு கண்டனம் செய்தவர் ஸூர்யோதயம் என்ற பெயரை வைத்தார். அதில் குளிர்ச்சியில்லாவிட்டாலும் பிரகாசமாவது இருக்கிறது. மத்வாசார்யர் அதைக்கூடப் பார்க்கவில்லை. பெயர் இரண்டுக்கும் விரோதமாக இருந்தாற் போதும் என்று நினைத்து ராஹூதயம் என்று வைத்தார்.

மனதிற்கு ஸந்தோஷத்தைக் கொடுத்து இன்பத்தைத் தருவதனால் ஞானத்தைச் சந்திரனாக கிருஷ்ணமிச்ரர் சொன்னார்.

ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் எதிரி அரசர்களுக்கு ஸைன்யங்களாக டம்பன் முதலியவர்கள் சொல்லப்பட்டிருக்கிறார்கள். டம்பனை 'நீ எந்த ஊர்?' என்று ஒருவர் கேட்கிறார். 'நான் இருப்பது சின்னக் காஞ்சீபுரம் அக்கிரஹாரம்' என்று அவன் சொல்லுகிறான். வேதாந்த தேசிகருக்குத் தாத்தாச்சாரியாரை கண்டால் பிடிக்காது. அவர் சின்னக் காஞ்சீபுரத்தில் இருந்தார். அதை நினைத்துக் கொண்டு இப்படி தேசிகர் சொல்லியிருக்கிறார்.

முதலில் தாபத்தை உண்டுபண்ணி ஒரு பிரகாசத்தைக் கொடுப்பது ஸூர்யோதயம். தாபத்தைச் சமனம் பண்ணி அப்புறம் உண்டாவதுதான் சந்த்ரோதயம்.

உஷ்ணமில்லாத பிரகாசத்தைத் தருபவன் சந்திரன் அந்தப் பிரகாசத்தை குளிர்ச்சியோடு கொடுக்கிறான். அவனுக்கு அமிர்தகிரணன் என்பது ஒரு பெயர். ஸூர்ய கிரணம் சுடும்; சந்திர கிரணம் குளிர்ச்சியாக இருக்கும்.

அத்வைதஸித்தி என்ற ஒரு கிரந்தம் மதுஸூதன ஸரஸ்வதீ என்பவர் செய்திருக்கிறார். அதற்கு மத்வமத ரீதியாகத் தரங்கிணீ என்று ஒரு கண்டனம் உண்டு. அத்வைதஸித்திக்கு வியாக்கியானம் ஒன்று கௌட தேசத்தில் இருந்த பிரம்மானந்த ஸரஸ்வதீ யென்பவர் சந்திரிகை என்ற பெயரோடு பண்ணியிருக்கிறார். பெங்களூரில் அநந்தாழ்வார்

என்ற தென்கலை வைஷ்ணவர் ஒருவர் இருந்தார். தேசிகரைவிட வித்வத்தில் பெரியவர் என்று அவரைச் சொல்லுவார்கள். அவர் சந்திரிகைக்கு ந்யாயபாஸ்கரம் என்று ஒரு கண்டனம் எழுதியிருக்கிறார். தேசிகர் சந்த்ரோதயத்துக்குக் கண்டனமாக சூர்யோதம் எழுதியதை அனுசரித்து அவர் சந்திரிகையின் கண்டனத்திற்கு ந்யாய பாஸ்கரம் என்று பெயர் வைத்தார்.

அத்வைத சாஸ்திரத்தில் ஞானத்தைச் சந்திரிகைக்கு ஸமானமாகச் சொல்லுகிறார்கள். மன்னார்குடி மஹா மஹோபாத்தியாய பிரம்மஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் பெரிய சாஸ்த்ரஜ்ஞர். அவருடைய பாண்டித்யம் அவருடன் சரியாய்ப் போய்விட்டது. அவர் அந்த பாஸ்கரத்துக்கு ஒரு கண்டனம் எழுதினார். அதற்கு ந்யாயேந்துசேகரம் என்று பெயர் வைத்தார். சந்திரனை உயர்த்தி வைக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு செய்யப்பட்டது அது. இந்துசேகரன் என்பது பரமேசுவரனுடைய பெயர். இந்த இரண்டும் அந்தப் பெயரில் பொருந்தியிருக்கின்றன. ஈச்வரன் சந்திரனைத் தூக்கி வைத்துக்கொண்டிருக்கிறாரல்லவா? இந்துசேகரம் என்ற பெயர் பல கிரந்தங்களுக்கு இருக்கிறது. சப்தேந்துசேகரம் என்று வியாகரண சாஸ்திரம் ஒன்று இருக்கிறது. அது மிகவும் உயர்ந்தது. அதைப் படித்தவர்களைச் சேகராந்தம் படித்தவர்களென்று சொல்லிப் பாராட்டுவார்கள். பரிபாஷேந்துசேகரம் என்று ஒரு வியாகரண சாஸ்திரம் இருக்கிறது. அதற்கு

இந்து சேகரனுக்குப் பிரியமான பேர்களை உடைய பல வியாக்கியானக் கிரந்தங்கள் இருக்கின்றன. அஸ்தி மாலை, ஸர்வமங்களை என்ற பெயர் களுடைய கிரந்தங்கள் இருக்கின்றன.

பின்னால் வந்த பலவித தடபுடலுக்கும் மூலம் கிருஷ்ணமிச்ரர் பக்தியோடு சாந்தமாகப் ப்ரபோத சந்த்ரோதயம் எழுதி அஜ்ஞான நிவர்த்தி பண்ணி கிற ஒரு கக்ஷிதான். அவரும் டம்பனைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். 'நீ எங்கே இருந்து வந்தாய்?' என்று டம்பனைக் கேட்ட பொழுது, அவன் 'நான் பிரம்மலோகத்திலிருந்து வருகிறேன்' என்று சொல் லுகிறான். 'அங்கே என்ன விஷயம்?' 'அங்கே போனேன். பிரம்மா தம்முடைய தொடையிலே உட்கார்த்தி வைக்க யோசனை பண்ணினார். உடனே கோமயத்தைக் கொண்டு தொடையைச் சுத்தி பண் ணினார். உட்கார்ந்தேன். கொஞ்சம் பேசிக் கொண் டிருந்தோம். அப்புறம் வந்து விட்டேன்' என்று டம் பன் சொல்லுகிறான்.

கிருஷ்ணமிச்ரர் அந்தக் கிரந்தத்தை கக்ஷி யில்லாமல் சாந்தத்தோடே எழுதினார். அவர் ஓர் உதயம் எழுதினார். அதிலிருந்து கக்ஷி பிரதிகக்ஷி உண்டாகிப் பலத்துப் போய் விட்டன. அவர் சாந்தமாகப் பண்ணினார். இப்படி வரப் போகிற தென்று அவருக்குத் தெரியாது. அவர் அந்தக் கிரந்தத்தின் முதலில் ஒரு மங்களச்லோகம் சொல்லி யிருக்கிறார்.

**अन्तर्नाडीनियमितमरुल्लङ्घितब्रह्मरन्ध्रं**

**स्वान्ते शान्तिप्रणयिनि समुन्मीलदानन्दसान्द्रम् ।**

प्रत्यग्ज्योतिर्जयति यमिनः स्फष्टलालाटनेत्र-
व्याजव्यक्तीकृतमिव जगद्व्यापि चन्द्रार्धमौलेः ॥

அந்தர்நாடீநியமித மருல்லங்கித
ப்ரஹ்மரந்த்ரம்
ஸ்வாந்தே சாந்தி ப்ரணயிநி ஸமுந்
மீலதாநந்தஸாந்த்ரம் |
ப்ரத்யக்ஜ்யோதிர்ஜயதி யமிநஃ
ஸ்பஷ்டலாலாடாநேத்ர-
வ்யாஜவ்யக்தீக்ருதமிவ ஜகத்வ்யாபி
சந்த்ரார்த்தமௌலேஃ ||

அந்த மங்கள ச்லோகம் ஸாக்ஷாத் சந்த்ரார்த்தமௌளி விஷயமாக உள்ளது. அந்தக் கிரந்தமானது கேவலம் வைராக்கியப்ரதானமும் சாந்தப்ரதானமும் ஆன நாடகமாதலால், பரமேச்வரன் சாந்தத்தோடும் வைராக்கியத்தோடும் இருந்த தக்ஷிணுமூர்த்தி அவஸரத்தைப் பற்றி அந்த மங்கள ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பரமேச்வரன் ஏகாகியாக யோகதக்ஷிணுமூர்த்தியாக இருந்ததை அதில் சொல்லுகிறுர். திருவெட்டீசுவரன்பேட்டை ஆலயத்தில் யோக தக்ஷிணுமூர்த்தி இருக்கிறுர். அந்தத் தக்ஷிணுமூர்த்தியை அந்த மங்கள ச்லோகத்தில் யமி என்று சொல்லியிருக்கிறுர். எல்லாவற்றையும் நிக்கிரஹம் பண்ணுகிறவன் யமன். யமியும் நிக்கிரஹம் எல்லாம் பண்ணினவன். இருக்கிறபொழுது எல்லாவற்றையும் நிரக்கிரஹம் பண்ணுகிறவன் ஸம்யமீ. நமக்கு இரண்டு ஸமயங்களில் நிக்கிரஹம் உண்டாகிறது. தூங்குகிறபொழுது நமக்கு

நிக்கிரஹம் இருக்கிறது. அப்பொழுது மதம் முதலியவை இல்லை. செத்துப்போகிறபொழுது நிக்கிரஹம் உண்டாகிறது. சாவும் ஒரு நித்திரை தான். தீர்க்க நித்திரை என்று அதற்கு ஒரு பெயர். ஒருவன் தூங்குகிறபொழுது ஆலோசனை நினைவு முதலியவைகளில் ஒன்றாவது இருக்கிறதோ? இல்லை. எங்கே இருக்கிறது என்று தெரியவில்லை. ஆனால் விழித்துக் கொண்ட உடனே எல்லாம் நிறைய வந்து விடுகின்றன. ஆனால் அவை தூங்கும் பொழுது எங்கே இருக்கின்றன என்று தெரிய வில்லை. அந்த மாதிரி தான் செத்துப் போகிற போதுகூட எல்லாம் அடங்கிவிடுகின்றன.

இப்படி, தூங்கும்பொழுதும் சாகும்பொழுதும் அடங்குவது ஸ்வாதீனமாக அடங்குவதல்ல! தூங்கும் பொழுது அடங்குபவை எல்லாம் மறுபடியும் விழிக்கும்பொழுது திரும்பி வந்து விடுகின்றன. அவை எப்பொழுது திரும்பி வருமோ தெரியாது. சாவிலும் அப்படித்தான். சாகும் பொழுது அடங்கியிருந்தாலும் வேறொரு தேஹம் வந்த பொழுது அதிகமாக வந்து விடுகின்றன. அவை ஸ்வாதீனம் இல்லாமல் அடங்கிவிடுவதால், ஸ்வாதீனமில்லாமல் திரும்ப வந்து விடுகின்றன. ஆகையால் அவற்றை ஸ்வாதீனமாக அடக்க வேண்டும். எல்லோரையும் அடக்குகிறவன் யமன். இந்திரியம் முதலியவைகளை ஸ்வாதீனத்தோடு அடக்குகிறவன் யமீ. நினைவோடே அவைகளை அடக்குகிறவன், கண்ணைப் பார்க்காதே என்று சொன்னால் பாராமல் இருக்க வேண்டும்.

ஸ்வாமி அப்படிச் செத்தவரைப் போல இருக்க வில்லை. ஸூரியனைப் பளீரென்று அடித்துப் பல்லை உதிர்த்தார். பிக்ஷாடனம் பண்ணினர். கூத்தடிக்கிறர். இப்படி ரொம்ப வேலை செய்கிறர். பக்தர்களுக்கு வரம் கொடுத்து விட்டு ஊரூராக திண்டாடுகிறர். நம்முடைய காரியத்துக்காகத் தான் திண்டாடுகிறர். எல்லாம் அடங்கி அவர் இருக்க வில்லை. ஆனலும் அப்படி அடங்கி இருந்த ஸமயம் என்றுண்டு. ஸ்வாமி எப்பொழுதும் உள்ளே அப்படி இருக்கிறர். உள்ளே அப்படியிருந் தால் வெளியிலே எப்படி வேண்டுமானலும் இருக்க லாம். வெளி அடக்கம் இருந்தால் தான் உள்ளடக் கம் தமக்கு உண்டாகும். திருஷ்டியைக் குறைத் துக் கொள், கூட்டத்திற் சேராதே, இந்திரிய வியா பாரங்களைக் குறைத்துக்கொள்என்று சொல்லுவது அதற்காகத்தான். வெளியிலே அதிகமாகப் ப்ரவிருத்தி இருந்தால் உள்ளே அடங்காது. அதனல் தான் காட்டுக்குப்போ, பணத்தை வைத் துக் கொள்ளாதே என்று பெரியவர்கள் சொல்லு கிறர்கள். அந்தப் பிரயோஜனம் கிடைத்து விட் டால் எப்படி வேண்டுமானலும் இருக்கலாம்.

ஸ்வாமி உள்ளே அடக்கமாக இருக்கிறர், வெளியிலே கூத்தடிக்கிறர். ஒரு ஸமயம் உள்ளே இருந்தது போல் வெளியில் இருப்பார். பார்வதி கல்யாணத்துக்கு முன் அப்படி ஒரு ஸமயம் இருந் தார். அப்படி இருந்தாரென்று குமார ஸம்பவத் தில் காளிதாஸ மஹாகவி எழுதியிருக்கிறர். பார் வதிக்கு முதலில் திரயம்பகராக தரிசனம் கொடுத்

தார். மூன்று கண்களையுடைய ஸம்யமியைப் பார்வதி பார்த்தாள் என்று அந்தக் கவி சொல்லுகிறார்.

நமக்கு இரண்டு கண்களே இருக்கின்றன. அவைகளுக்கு இருப்பது வெளிப்பார்வை. இந்த இரண்டு கண்களைத் தவிர மூன்றாவது கண் ஒன்று உண்டு. அது பரமேச்வரனுக்குத்தான் இருக்கிறது. அதைப் பற்றிப் ப்ரபோத சந்த்ரோதயகாரர், முன் கூறிய ச்லோகத்திற் சொல்லுகிறார். ஸ்வாமி யமியாக இருந்தார். எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு இருந்தார். தேஜஸ்—ஆத்ம ஜ்யோதிஸ்—பிரகாசிக்கிறது. தரிசன மாத்திரத்திலேயே அந்த ஆத்ம தேஜஸ் தெரிகிறது. ஸ்பஷ்டமாக லலாட நேத்திரம் தெரிகிறது. அந்த வியாஜத்தில் ஆத்ம ஜ்யோதிஸ் தான் பிரகாசிக்கின்றது. அந்த ஜ்யோதிஸ் ஸமஸ்தலோக வியாபகமாக இருக்கிறது. அது எல்லாவற்றிக்கும் ஆதாரம்.

தேஹமத்யநாடி ஸுஷும்ந நாடி, யோகாப்பியாஸம் பண்ணி அதில் காற்றை விட்டு ஆறு சக்கரங்களின் வழியாக பிரம்மரந்திரம் வரையிற் போய்த் தன் மனதில் சாந்தி என்கிற பத்தினியை வைத்துக்கொண்டால் ஆனந்தம் உண்டாகிறது. மனது சாந்தம் குறையாமல் இருந்தால்—அதாவது சாந்தி யென்னும் ஸம்ஸாரம் இருந்தால்—எப்பொழுதும் ஆனந்தந் தான். மற்ற ஸம்ஸாரத்தால் துன்பந்தான் உண்டாகின்றது. எவ்வளவு குணம், பக்தி உடையவளாக இருந்தாலும் பக்கத்தில் இருப்பதற்கு பிரதிபந்தகம் ஏற்பட்டால் வருத்தம் உண்

டாகிறது. அப்படியில்லாமல் எப்பொழுதும் மன தில் இருந்து விட்டால் துக்கமே இல்லை.

ஸ்வாமியிடம் ஆத்மஜ்யோதிஸ் பிரகாசிக் கிறது. தபஸ்வி ரூபமாக இருக்கிறார். லோகம் முழுவதும் ப்ரகாசம் இருக்கிறது; ப்ரம்மஸ்வரூப மாகக் காணப்படுகிறது. உள்ளே நிறைந்திருக்கும் சாந்தத்தை வெளியிலும் வைத்துக் கொண்டு ஆத்ம நிஷ்டையைப் பண்ணிக்கொண்டு சிஷ்யர்களுக்கு ஞானமுத்திரையைக் காட்டிக் கொண்டு இருக்கிறார். உள்ளே இருக்கிறது வெளியிலும் ஜகத்திற்குத் தெரியட்டுமென்று யோக நிஷ்டையில் இருக்கிறார். பராசக்தியாகிய சாந்தியை மனஸில் வைத்துக் கொண்டு அதனால் நித்தியானந்தத்தோடு இருக் கிறார். லலாடநேத்ர ரூபமாக ஆத்ம ஜ்யோதிஸ் ப்ரகாசிக்கிறது. பின்னால் விவேகனை அரசனாக வைத்து நாடகம் எழுதப் போகிறபடியால் இந்த மாதிரி ஸ்தோத்திரத்தை அவர் பண்ணினார்.

அந்த ஸ்வாமி யார்? சந்திரமௌளீச்வரர்தான். சந்திரனுக்கு ஸோமன் என்று பெயர் உண்டு. ஸோமவாரம் இன்றைக்கு. இன்றைக்குச் சந்திர மௌளீச்வரருடைய சிரஸிலிருக்கிற சந்திரனுக்குரிய (Monday) நாள். அஷ்டமியில் அர்த்தசந்திரன் இருப்பான். இன்று அஷ்டமி. சந்திரமௌளீச் வரர் அர்த்தசந்திரனைத்தான் மௌளியில் வைத் திருக்கிறார். அவர் சந்திரார்த்தமௌளி.

இன்று ஒரு விசேஷம் கிருஷ்ணாஷ்டமி. அஷ்டமியில் ராத்திரி தான் சாப்பிடவேண்டும், திவா உபவாசம் இருக்க வேண்டும். ஞாயிறு, இரண்டு

பர்வகாலங்கள் இவைகளில் ராத்திரி உபவாசம் இருக்க வேண்டும். சதுர்த்தசி அஷ்டமிகளில் பகலில் சாப்பிடக் கூடாது. இன்று கார்த்திகை ஸோமவாரம். சாப்பிடக்கூடாது. உபவாஸ விசேஷம் இன்றைக்கு ஏற்பட்டிருக்கிறது. இன்றைக்கு அஷ்டமி சந்திரனாகிய அர்த்தசந்திரன் இருப்பதற்குப் பொருந்தியதாக இன்று எடுத்துக் கொண்ட இந்த சுலோகத்திலும் 'சந்திரார்த்தமௌளி' என்று அவர் சொல்லியிருக்கிறார்,

பகவத் கீதையில் இந்த ச்லோகத்தை அனுஸரித்த ஒரு ச்லோகம் இருக்கிறது.

या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥

யா நிசா ஸர்வபூதாநாம்
தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ |
யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி
ஸா நிசா பச்யதோ முநே: ||

—கீதை, 2–69.

அதில் யமி தனியான ஜ்யோதிஸோடு இருக்கிறார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்யமீ ராத்திரியில் பிரகாசிக்கிறான்; எல்லோரும் எப்பொழுது தூங்குவார்களோ அப்பொழுது விழித்துக் கொண்டிருக்கிறான்; எப்பொழுது எல்லோரும் விழித்துக் கொண்டிருக்கிறார்களோ அப்பொழுது உள்ளத்தை, உள்ளபடி அறிகிறவனுக்கு இருட்டாக இருக்கும் என்று பகவத்கீதை சொல்லுகிறது. அவன் கோட்டானைப் போல இருப்பானென்று

தோற்றுகிறது. இதற்கு என்ன அர்த்தம்? இது ஒரு புதிர்போட்ட மாதிரி இருக்கிறது.

நம்முடைய சாஸ்திரப்படி லோகத்திலுள்ள பதார்த்தங்களெல்லாம் பரமாத்மஸ்வரூபமாகும். அதைத் தவிர இரண்டாவது வஸ்துவே கிடையாது. உபநிஷத், பேதம் இல்லை என்று சொல்லுகிறது. நாம் எந்த மாதிரி பார்க்கிறோம்? வேறு வேறாகப் பார்க்கிறோம். நிஜமாகப் பார்க்கும் பொழுது எல்லா வற்றையும் பரமாத்மஸ்வரூபமாகப் பார்ப்பான். அப்பொழுது பார்க்கிறவனும் அடங்கி விடுவான். தானாகப் பார்க்கிறவன் எல்லாவற்றையும் தானாகப் பார்ப்பான்; எல்லாம் பரமாத்மஸ்வரூபம். பரமாத்மஸ்வரூபத்தில் பார்க்கிறவனும் ஒருவன். அதனால் தான் வேறு பரமாத்மா ஒன்று இல்லாமல் எல்லா வற்றையும் தானாகப் பார்ப்பான். நாம் பார்ப்பது அவனுக்குப் பொய்யாக இருக்கிறது. வேறாகப் பார்த்தால் அவனுக்கு இருட்டு. நாமாகப் பார்க்கிறதை விட்டுவிட்டு வேறே என்று பார்க்கும் பொழுது அவனுக்குத் திண்டாட்டம் ஏற்படுகிறது. வேறே ஒருவன் அடிப்பது போல நினை யென்றால் அது நம்மால் முடியும். அவனால் முடியாது. நாமே அடித்துக் கொள்வதாக நினை யென்றால் அது நம் மால் முடியாது. நமக்கு எல்லாம் வேறாகத்தோன்று கிறது. நாமாகப் பார்ப்பதென்றால் நமக்கு இருட் டாகிறது. வேறாகப் பார்ப்பதனால் அவனுக்கு இருட் டாகிறது. மத்தியில் ஒருவர் இருக்கிறார். அவரைத் தடஸ்தர் என்பார்கள். கரையில் இருப்பவர் அவர். காவேரியில் ஒருவன் போகிறான். வயலில் ஒருவன்

உழுதுகொண்டிருக்கிறான். கரையில் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு இரண்டு பேரும் காணப்படுவார்கள். உழவனைக் கூப்பிட்டுக் காவேரியிற் போகிறவனை எடுக்கச் சொல்லலாம். ஊரிலிருக்கிறவனுக்குத் தானைப் பார் என்றால் இருட்டாகிறது; ஞானிக்கு வேறாகப்பார் என்றால் இருட்டாகிறது; ஸ்வாமி இரண்டையும் பார்க்கிறார். தம்மையும் பார்க்கிறார்; வேறேயாகவும் பார்த்துக் காரியமும் பண்ணுகிறார்.

நிலைக்கண்ணாடி ஒன்று இருக்கிறது. அதில் நாம் பார்க்கிறோம். நம்முடைய பிரதிபிம்பம் தோன்றுகிறது. மாடு வந்து பார்க்கிறது. ஏதோ எதிரிமாடு வந்திருக்கிறதென்று நினைத்து முட்டுகிறது. கண்ணாடி உடைந்து போகிறது. நமக்கும் ஒரு எதிரி மனிதன் தோன்றுகிறான்; ஆனால் அது பிரதிபிம்பம் என்பதை அறிகிறோம். அந்த மாதிரி தான் ஸ்வாமியும் இருக்கிறார். நாம் வைத்த கண்ணாடி ரஸம் பூசினது. அதைப்போல் ஸ்வாமி இருக்கிறார். நாம் வேறொருவனோடு சண்டை போடுவதாக நினைக்கிறோம். கண்ணாடியில் பார்த்த மாடு போல் எண்ணுகிறோம். உண்மையில் நம்மையே நாம் அடித்துக்கொள்ளுகிறோம். மாடுபோல் இருப்பதால் தான் பசு என்ற பெயர் ஜீவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. ஸ்வாமி பார்ப்பதற்கும் நாம் பார்ப்பதற்கும் இது தான் வித்தியாசம். ஸ்வாமி பார்த்தால் இது வெறும் பிரதிபிம்பம் என்று எண்ணி விடுகிறார். நாம் வேறாகப் பார்க்கிறோம்.

பரமேச்வரனாகிய ஸம்யமி நமக்காகப் பார்க்கிறார். ஸ்வாமி ஸம்யமியாக இருந்த அவஸரந்தான் தக்ஷிணாமூர்த்தி. வேறேயாகப் பார்ப்பதால் நமக்கு ப்ரகாசமாக இருக்கிறது, ஞானிக்கு இருட்டாக இருக்கிறது. தானாகப் பார்ப்பதில் ஞானிக்கு ப்ரகாசமாக இருக்கிறது. நமக்கு இருட்டாகிறது. நாம் எப்படி பார்க்கிறோமோ அப்படி லோகம் இருக்கிறது. நம்முடைய திருஷ்டி மூக்குக் கண்ணாடி போல் இருக்கிறது.

முனியாகவும் ஸம்யமியாகவும் பரமேச்வரன் ஓர் அவஸரத்தில் இருந்தார்.

ஞானமார்க்கத்தில் ப்ரவேசித்த பக்தர்கள் பரமேச்வராராதனையில் ப்ரார்த்தனை பண்ணுகிற ஒரு ச்லோகம் உண்டு.

याचे नाभिनवं ते चन्द्रकलोत्तंस किंचिदपि वस्तु ।
मह्यं देहि च भगवन् मदीयमेव स्वरूपमानन्दम् ॥

**யாசே நாபிநவம்தே**
**சந்த்ரகலோத்தம்ஸ கிஞ்கிதபி வஸ்து ।**
**மஹ்யம் தேஹி ச பகவந்**
**மதீயமேவ ஸ்வரூபமாநந்தம் ॥**

—மானஸபூஜை.

மதுரையில் ஆவணி மூலம் திருநாள் நடக்கிறது. அது பகவான் பிட்டுக்காக மண் சுமந்த தினம். வைகையில் உடைப் படைக்க வேண்டுமென்று மண் சுமந்தார். அப்பொழுது அரசன் பிரம்பினால் அடித்தான். அந்தப் பிரம்படி எல்

லோருக்கும் பட்டது. இந்த விஷயத்தைப்பற்றிச் சொல்லும் சிவலீலார்ணவத்தில் இந்த ஸமயத்தில் ஸ்வாமியிடம் சில பேருக்கு அதிருப்தி உண்டா யிற்றென்றும் அநேகம்பேர் அநேக தினுஸாகப் பேசினார்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

वेत्राहतिं विभक्तुं विश्वात्मकता प्रदर्शिता भवता ।
करगतकबलग्रासे पुनरभिनीतं शिवाद्वैतम् ॥

*வேத்ராஹதிம் விபக்தும்*
*விச்வாத் மகதா ப்ரதர்சிதா பவதா |*
*கரகதகபலக்ராஸே*
*புநரபிநீதம் சிவாத்வைதம் ||*

—சிவலீலார்ணவம், 21–95

'உன்னுடைய அடியைப் பாகம் பண்ணுவதில் மாத்திரம் நீ விச்வாத்மகன் என்பதைக் காட்டினாய். பிட்டுக் கொடுத்தாளே, அப்பொழுது என்ன செய் தாய்? அப்பொழுது மட்டும் இரண்டாவது இல்லை. சிவாத்வைதம். அடிபட மாத்திரம் எங்கும் தேகம் இருக்கிறதோ?' என்று ஒருவர் சொன்னார். இப்படிப் பலபேர் பலவிதம் சொன்னார்கள். ஸ்வாமி பக்ஷமாகப் பேசுகிறவர் ஒருவர் வந்தார்.

त्राणे योऽधिकृतः समस्तजगतां तस्याम्बुराशौ सुखं
निद्राणास्य तथाविधेऽपि समये प्रष्टैव नालक्ष्यते ।
विष्टिं कुर्वति ताम्यति श्रमभराद्वेत्राहतिस्त्वय्यभूत्
कस्याग्रे कथयिष्यसीममनयं स्वामिन् अनाथो ह्यसि ॥

த்ராணே யோऽதிக்ருதஸ்ஸமஸ்த ஜகதாம்
தஸ்யாம்புராசௌ ஸுகம்
நித்ராணஸ்ய ததாவிதேऽபிஸமயே
ப்ரஷ்டைவ நாலக்ஷ்யதே |
விஷ்டிம் குர்வதிதாம்யதி ச்ரமபராத்
வேத்ராஹதிஸ்த்வய்யபூத்
கஸ்யாக்ரே கதயிஷ்யஸீமமநயம் ஸ்வாமிந்
அநாதோஹ்யஸி ||

—சிவலீலார்ணவம், 21-89

நீர் அநாதையாக இருக்கிறீர். வைகையாறு உடைப் பெடுத்துக்கொண்டதென்று அடைக்க வந்தீர். பரிபாலனம் பண்ணவேண்டியது நாராயணருடைய வேலை. அவர் இப்பொழுது ஸமுத்திரத்தில் ஆனந்தமாகத் தூங்குகிறார். எங்கே உடைப்பெடுத்தால் அவருக்கு என்ன! எவ்வளவு ஜலம் ஏறினாலும் அவருக்குத் தெரியாது. பிரளய உபத்திரவம் தெரியாத இடத்தில் அவர் இருக்கிறார். கேட்பார் கிடையாது. இவருடைய உத்தியோகமாயிற்றே இவர் தூங்கிக்கொண்டிருக்கிறாரே என்று கேட்பார் கிடையாது. மண் கூடையைத் தூக்க மாட்டாமல் தூக்கி நீர் சிரமப்படுகிறீர். உமக்குப் பிரம்படி கிடைக்கிறது. இந்த அநியாயத்தை யாருடைய முன்னிலையிற் போய்ச் சொல்வீர்! நீர் அநாதை. சொல்கிறதற்கு உமக்கு மேல் ஒரு நாதன் இல்லை. சொல்லியாவது ஆறலாம். அதற்குக் கூட இடம் இல்லை.' இப்படி அவர் சொன்னார்.

மற்றொருவர் பெரிய மேடையின்மீது ஏறிக் கொண்டார். எல்லோரையும் கூட்டிக் கொண்டார்.

"இப்பொழுது ஒரு தீர்மானம் பண்ணவேண்டும். இவரே நேரில் இருக்கிறார். தீர்மானம் பண்ணி இவரிடமே கொடுத்துவிட வேண்டும். தபால் மூலம் அனுப்ப (Forward) முடியாது. இப்பொழுதே ஒரு தீர்மானம் பண்ணிவிடவேண்டும். அப்புறம் ஆள் அகப்படமாட்டார். இப்பொழுது பண்ணுவிட்டால் துன்பம்", என்று சொல்லிப் பேச (Address) பண்ண ஆரம்பித்தார்.

हे सन्तः शृणुताधुनैव मिलीतैरस्माभिरेतच्छिवे
वाच्यं वेत्रहतिं विभज्य न वयं भोक्तुं समर्था इति।
नो चेत् पादहतिः शिलाप्रहरणं कोदण्डदण्डाहतिः
गण्डूषाम्बुनिषेचनं च सकलं सर्वं विभाज्यं भवेत् ॥

**ஹே ஸந்தः ச்ருணுதாதுனைவ**
**மிலிதைரஸ்மாபிரேதச்சிவே**
**வாச்யம் வேத்ரஹதிம் விபஜ்ய ந வயம்**
**போக்தும் ஸமர்த்தா இதி ।**
**நோசேத் பாதஹதிः சிலாப்ரஹரணம்**
**கோதண்டதண்டாஹதிः**
**கண்டூஷாம்புநிஷேசநம் ச ஸகலம்**
**ஸர்வம் விபாஜ்யம் பவேத் ॥**

—சிவலீலார்ணவம் 21-83

"ஏ ஸாதுக்களே! வாருங்கள், அப்புறம் என்று சொல்லாதீர்கள். இப்பொழுது கூடியிருக்கிறோம். என்ன தீர்மானம் பண்ணுவது தெரியுமா? நீர் பிரம்படியைப் பிரித்துக் கொடுத்தீரே; அதை வாங்கிக்கொள்ளத்தயாரயில்லை யென்று அவரிடம்

சொல்லவேண்டும். அடிபட்டாலும் நாம் சம்மதிக்க மாட்டோம் என்று சொல்லிவிடவேண்டும்" ஜப்தி பண்ணினாலும் உடனே ஆக்ஷேபமனு கொடுத்தால் பின்னால் வியவஹாரம் சௌகரியம் அல்லவா?

அவர் சொல்லுகிறார்: "இப்பொழுதே கொடுக்காமற் போனால் அப்புறம் நமக்குத்தான் கஷ்டம். இவர் எங்கே பார்த்தாலும் அடிபடுகிற பேர் வழி. இன்னும் ஒருவன் காலாலுதைப்பான், கல்லாலடிப்பான், வில்லாலடிப்பான், எச்சில் துப்புவான், இத்தனைக்கும் நாமும் பங்காளியாக நிற்க வேண்டியிருக்கும். தெரிந்தவரைக்கும் இவ்வளவு பேர் அடித்திருக்கிறார்கள். இன்னும் எவ்வளவு பண்ணுவார்களோ-பக்தர்கள்!" என்றார்.

கடைசியாக ஒருவர் வந்தார். ஸ்வாமியிடம் நான் ஒன்று கேட்கிறேனென்று வந்தார். "ஒரு வாணிச்சியிடம் வெல்லம் போட்ட பிட்டை வாங்கிக் கொண்டு அதற்காக வைகைக் கரையில் மண் கொட்டுகிறேனென்று அடிபட்டீர். என் ஹிருதய கமலத்தில் பக்தி ரஸம் இருக்கிறது. அங்கே வந்து என் மனோபாவத்தைச் சாப்பிட்டு விட்டு ஸம்ஸார பிரவாஹத்தை அடையும். நான் அடிக்கமாட்டேன். ஒன்று கொடுத்தால்தான் பண்ணுகிறதென்று வைத்துக்கொண்டிருக்கிறீர். பக்திரஸத்தையும் மனோபாவத்தையும் கலந்து கொள்ளும்" என்று ப்ரார்த்திக்கிறார். அப்படியே நாமும் பிரார்த்திப்போம். மனோபாவம் போய்விட்டால் யமியினுடைய நிலை உண்டாகி ஆத்மானந்தத்தைப் பெறலாம்.

---

ஸ்ரீ சந்திரமௌளீச்வராய நம:

## ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்
### சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யர்களுடைய அநுக்ரஹ பூர்வமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—50 |
| 2. | ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும் கூடியது. .... .... .... | 0—50 |
| 3. | ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... | 0—25 |
| 4. | ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்கிருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... | 2—00 |
| 5. | ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்-ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும். .... .... | 0—87 |
| 6. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும், .... | 2—00 |
| 7. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்கிருதத்தில் .... .... | 0—30 |
| 8. | —ஷை—தமிழில் ச்லோகம், நாமாவளியும் .... .... | 0—25 |
| 9. | ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—87 |
| 10. | விஷ்ணு பாதாதி கேசாந்தஸ்தோத்திரம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும், .... | 0—75 |
| 11. | ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—75 |
| 12. | மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... | 0—62 |
| 13. | ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது | 1—75 |
| 14. | ஸ்ரீ துர்கா சந்திரகலா ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... | 0—37 |
| 15. | ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது. .... .... .... | 0—75 |

**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1

லிபர்ட்டி அச்சகம், சென்னை 1